REGD. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 812818 4 பக்கம் விலை 30 காசு



தாய்மொழி

குழந்தையின் உடல் வளர்ச்சிக்கு தாய்ப் பால் எவ்வளவு இன்றியமையாததோ, அவ்வளவு இன்றியமையாதது மனிதனின் மன வளர்ச்சிக்குத் தாய் மொழி.

-அண்ணல் காந்தி

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

சூதுமுறை

உரிமையைப் பறிக்கும் சூதுமுறையான தீண்டாமையால் ஏராளமான மக்கள் வீணாகி நிற்கின்றனர். தீண்டாமையை அறவே நீக்கியாக வேண்டும்.

-பேரறிஞர் அண்ணா



மலர்: 3 (●) சென்னை 30—1—1979 செவ்வாய் (★)❋●❋(★) வெளியூர் 31—1—1979 புதன் (●) இதழ்: 102

★ அண்ணாவின் பெயரால் மாணவர்களுக்கு பரிசுத் திட்டம் ★ தமிழுக்குதொண்டாற்றும் மருத்துவர்களுக்கு உதவி ★ புதிய கண்டுபிடிப்புகளை ஏழைகளுக்கு சொந்தமாக்குங்கள்

## தமிழக அரசு எந்த தியாகத்தையும் செய்து தமிழ் மொழியைக் காப்பாற்றும்

# புரட்சித்தலைவர் சூளுரை

சென்னை, ஜன 30- தமிழ் மொழியை எந்த வகையிலும் இரண்டாம் தரமொழியாக ஆக்க தமிழகம் ஒப்பாது தமிழக அரசு எந்த தியாகத்தையும் செய்து தமிழ் மொழியைக் காப்பாற்றும் என்று முதல்வர் புரட்சித்தலைவர் சூளுரைத்தார்.



நேற்று சென்னை மருத்துவக்கல்லூரியில் நடந்த பொங்கல் விழாவில் முதல்வர் புரட்சித்தலைவர் பேசினார்.

சென்னை மருத்துவக் கல்லூரி மாணவர்களின் தமிழ் மன்றத்தின் சார்பில் பொங்கல் திருநாள்கொண்டாடப்பட்டது.

விழாவில் முதல்வர் புரட்சித்தலைவர் பங்கு கொண்டு சிறப்புரை ஆற்றினார்.

விழாவுக்கு வை. சிவராஜன் தலைமைவகித்தார். மருத்துவக்கல்வி இயக்குநர் டாக்டர் ஞானதேசிகனும் அந்த விழாவில் பேசினார். மன்றச் செயலாளர் ரமேஷ் சந்தர் அனைவரையும் வரவேற்றார்.

முதல்வர் புரட்சித்தலைவர் பேசுகையில் கூறியதாவது:-

முத்தமிழ் விழா என்ற வகையில் இங்கே விழா கொண்டாடப்படுகிறது. இந்த மருத்துவ மனைக்கும் எனக்கும் 1967-ம் ஆண்டு முதல் மிக நெருக்கமான தொடர்பு உண்டு.

மனிதன் செத்துப் பிழைத்தான் என்று சொல்வார்கள். எனக்கு மீண்டும் வாழ்வு தந்த இடம் இது.

ஒரு காரியத்தை நல்லது என்று நாம் செய்வோம். ஆனால் அந்த நல்ல காரியம் ஒரு பகுதியினருக்கு நல்லதாக இருக்கும் மறு பகுதியினருக்கு அதே நல்ல காரியம் பாதகமாகக் கருதப்படும்.

ஒரு ஏழைக்கு உதவமுன் வந்து வேலை வாங்கித்தந்தால் அது அவருக்கு நன்மையாக இருக்கும்.

ஆனால் அந்த ஏழையை விட மிக ஏழையாக இருப்பவர் அந்த வேலை கிடைக்கவில்லை என்று வருந்துவார்.

இதை உணர முடியாமல் நன்மை செய்ததை நினைத்துப் பெருமைப்படும்போது அந்த வாய்ப்புக் கிடைக்காதவர்கள் தூற்றுவார்கள். சபிப்பார்கள்.

## என் ஆத்திரம்?

அதுபோல தமிழைவாழ வைக்க வேண்டும் போற்ற வேண்டும் உயிராக கருத வேண்டும் என்ற எண்ணத்தில நாம் இருக்கிறோம். அதற்காக எந்தவகையில் செயல்பட இருக்கிறோம் என்று சொல்லி செயல்படும் போது யாருக்கோ ஆத்திரம் வருகிறது.

தமிழைப் பொறுத்த வரையில் எந்த எந்த வழியில் வளர்க்க வேண்டுமோ அந்த அந்த வகையில் உருவாக்க படித்து பட்டம் பெற்றவர்கள், பேராசிரியர்கள், திறமையுள்ளவர்கள் ஒத்துழைக்க வேண்டும் முதல்வர் என்ற முறையில் இதனை வேண்டிக் கேட்டுக்கொள்கிறேன்

காலம் சூழ்நிலை என்னைப் போன்றவர்கள் இப்படிப்பட்ட நல்ல நிகழ்ச்சியிலும் இதுபற்றி பேச வேண்டி இருக்கிறது இதுநம்முடைய துரதிருஷ்டம் அல்ல பிறருடைய துரதிருஷ்டம் ஆகும்.

இதைப்பற்றி அவர்கள் சிந்திக்க வேண்டிய கட்டம் என்பது என் கருத்து.

இந்த நிலையில் தமிழ் மன்ற சார்பில் விழா நடக்கிறது. தமிழில் இயற்றமிழ்-இசைத் தமிழ்-நாடகத்தமிழ் என்று பிரித்து வைத்திருக்கிறார்கள்.

எத்தனை ஆண்டு காலத்திற்கு முன்பு இப்படி பிரித்தார்களோ? இலக்கணத்தை உருவாக்கினார்களோ? இலக்கியத்தை உருவாக்கினார்களா என்று எண்ணிப்பார்க்கும் போது தமிழின் தகுதி திறமையை உணரமுடிகிறது.

மருத்துவர்கள் மக்களின் உடலைப் பேணிப் பாதுகாக்க கடமைப்பட்டவர்கள் வந்த நோயைத் தீர்க்கவும் நோய்வராமல் தடுக்கவும் பாடுபடுகிறார்கள்.

உள்ளத்தில் ஏற்படும் நோய் உடலையும் பாதிக்கிறது. மொழிப்பற்று இல்லாதவர்களை தாக்கும் நோய்க்கு மொழிப்பற்று தான் மருந்து ஆகும்.

தாய்மொழி தமிழ்என்று தெரிந்து கொள்ளாதவர்கட்கு தாய்மொழிதான் மருந்து. இதற்கு வேறு மருந்து தர முடியாது.

இங்கே இந்த மருத்துவக் கல்லூரியின் பெயர் பலகை கூட தமிழில் இல்லை என்று நண்பர் என்னிடம் சுட்டிக் காட்டினார்.

இது வருந்தத்தக்கது ஆகும். விரைவில் தமிழ் பெயர் பலகை வைக்கப்படும் (கைதட்டல்)

ஆங்காங்கு திருக்குறள் எழுதப்பட வேண்டும் என்றும் கேட்டார்கள். மக்கள் நடமாடும் இடங்களில், திருப்புமுனைகளில், கார்கள் நிற்கும் இடங்களில் ஆங்காங்கு திருக்குறள் எழுதப்பட வேண்டும் என்றுசொல்கிறேன்.

சொல்கிறேன் என்று நான் சொல்லும் போது யாருக்குச் சொல்கிறேன் என்பதைத் தெரிந்து இதனை நிறைவேற்றுவார்கள்.

(கைதட்டல்)

பிற மாநிலங்களில் கார்களில் எண்களை அந்த அந்த மாநில மொழிகளில் கூட எழுதுகிறார்கள். நாம் அந்த அளவுக்குப் போகப் போவதில்லை. ஆனாலும் அந்த நிலைக்குப் போனால் தான் புரிந்து கொள்வார்கள் போல இருக்கிறது.

மருத்துவர்கள்பணத்தில் வளராவிட்டாலும், உள்ளத்தால் வளராவிட்டாலும், திறமை வளர்ந்து புகழ் வளர்ந்து நாட்டின் களஞ்சியமாக நாட்டின் மிகப் பெரிய சொத்தாக ஆக வேண்டும்.

அண்மையில் ஐந்து ஜப்பானிய மருத்துவ நிபுணர்கள் என்னை சந்தித்தனர்.

தமிழகத்தில் மருத்துவ நிபுணர்களை சந்தித்தது பற்றி என்னிடம் தெரிவித்தனர் இவர்களின் திறமைக்கு ஏற்ப மருத்துவக் கருவிகள் இல்லை என்று கூறினார்கள்.

இது பெருமைப் படுவதாக இல்லை, வேதனையும் வெட்கமும் அடைந்தேன்.

ஒன்றரை ஆண்டுகாலம் முதல்வராக இருந்தும் இதை கேட்கும் நிலை இருக்கிறது. இதற்கு நமது பொருளாதார நிலை ஒரு காரணம் என்றாலும் இதுபற்றி நாம சிந்திக்க வேண்டும்.

நான் வெளிநாடு சென்று இருந்தபோது ஒரு மருத்துவமனையில் இதய அறுவை சிகிச்சையைப் பார்த்தேன்- அப்படிப்பட்ட வசதிகள் அனைத்தையும் நாம் பெற்றாகவேண்டும்.

(கைதட்டல்

இது போன்ற இடத்தில் ஒரு பக்கத்தில் அறைஒன்று இருக்கிறது. 10 15 அடி அளவில் அந்த அறை இருக்

(4-ம்பக்கம் பார்க்க)



தமிழ்நாடு குடிசைமாற்று வாரிய தலைவர் ராமபத்திரனின் மகள் திருமண விழாவில் முதல்வர் புரட்சித்தலைவர்

‘அண்ணா குல்லா போடச் சொன்னாரா?’ என்ற

# கருணாநிதி கேலிக்கு ப. உ. ச. சாட்டை

வேலூர், ஜன 30. அண்ணா குல்லா போடச் சொன்னாரா என்ற கருணாநிதியின் கேலி மொழிக்கு ப. உ. ச. காட்டமாக பதிலளித்தார் புரட்சித்தலைவர் தன் தலைக்குத்தான் குல்லா போட்டுக் கொண்டாரே தவிர அடுத்தவர் தலைக்குப் போடவில்லை என்று பல்லாயிரம் மக்களின் கரவொலிக்கும் ஆரவாரத்திற்கும் இடையில் அவர் குறிப்பிட்டார்.

இந்தி சமஸ்கிருதம் ஆகிய இரு மொழிகளுக்கு மட்டும்தான டைரக்டரேட் உள்ளது. எல்லா மொழிகளுக்கும் தனித் தனி டைரக்டரேட் அமைக்கப் போராட நாங்கள் தயார்—கருணாநிதி தயாரா என்றும் ப உ. ச. சவால் விட்டார்.

வட ஆற்காடு மாவட்ட எம். ஜி. ஆர் மன்றத்தின் சார்பில் வேலூர் கோட்டை மைதானத்தில் நடைபெற்ற கழகப் பொதுக்கூட்டத்திற்கு இரா. ச. மாரன் தலைமை வகித்தார்.

கூட்டத்தில் ப. உ. சண்முகம் எம். எல். ஏ. கழிஞ்சூர் செல்வராஜ், ஏவி. எம். நெடுஞ்சேரலாதன் குடியேற்றம் மெய்ஞானம் திருவண்ணாமலை அலீஸ் பாட்சா, ஜானகிராமன், சீனிவாசன். பாலீஷ்நடராஜன், தவசீலன், கோபால், எம் எஸ் பாண்டியன், வடிவேல்,கோவி,எஸ் மோகன் மணவாளன் மற்றும் பலர் பேசினர்.

ப.உ சண்முகம் பேசும் போது கூறியதாவது:

தி. மு. க.வை விட்டு கருணாநிதி என்னை ஏன் துரத்தினார் என்ற விவரங்களைச் சொல்லி தி. மு. க. வின் முதுகெலும்பை உடைக்க வேண்டும் என்று இங்கே பேசியவர்கள் கூறினர்.

நான் யாருடைய முதுகெலும்பையும் உடைப்பவனல்ல: உடைப்பவனை தடுப்பவன் திமுக விலிருந்தபோது அனைத்திந்திய அண்ணா திமுகவை வசைபாடியதில்லை. அனைத்திந்திய அண்ணா திமுகவுக்கு வந்த பிறகும் திமுகவை வசை பாடுவதில்லை.

திமுகவின் தலைமைக்கு என்னைப் பிடிக்கவில்லை எனக்கு தலைமையை பிடிக்கவில்லை. கருணாநிதி வேலூரில் வந்து பேசிய போது சொல்லத்தகாத வார்த்தைகளை கொட்டிவிட்டுச் சென்றிருக்கிறார். கருணாநிதி தன்னுடைய முகத்தை ஒரு முறை கண்ணாடியில் பார்த்துக் கொள்ளட்டும்.

காட்டூர் கோபால் படத் திறப்பு விழாவில் என்னைப் பற்றி தரக்குறைவாக பேசியிருக்கிறார். திமுகவின் அடிமட்டத் தொண்டன் கூடப் பேசாத அளவுக்கு கட்சியின் தலைவர் கருணாநிதி பேசியிருக்கிறார்.

நான் அதற்கு பதிலளித்தால் கருணாநிதியால் தாங்கிக்கொள்ள முடியாது. பாவம் மன்னித்து விடுகிறேன்.

(பலத்தகைதட்டல்

## அண்ணாவில் சிறுகதை

குங்குமம் வார ஏட்டில் குறளோவியம் மூலம் என்னை பற்றி எழுதி இருக்கிறார். அதற்கு பதிலளிக்கும் வகையில் ‘அண்ணா’ நாளேட்டில்சிறுகதை மூலம் பதில் கூறியிருக்கிறேன். கருணாநிதி தொடர்ந்தால் சிறுகதையும் தொடரும்.

## புரட்சித்தலைவர் பண்பு

புரட்சித்தலைவர் திமு.க. விலிருந்து விலக்கப்பட்டு புதிதாக கட்சி தொடங்கிய 6 ஆண்டுகள் கழித்து திருவண்ணாமலையில் வந்து பேசுகிறார் முதல்வராக. அப்போது நான் வீட்டு மாடியிலிருந்து கேட்டுக் கொண்டிருக்கிறேன்.

அந்த 6 ஆண்டுகளுக்கு பிறகு முதல்வர் புரட்சித்தலைவர் பேசிய போது ‘அன்பு கெழுமிய நண்பர் ப உ ச,என்றுதான் பேசினார்.

நான் மாடியில் இருந்து கேட்டேன், கண்ணீர் வடித்தேன், 6 ஆண்டுகள்



சென்றப்பின்பும் மறக்காமல இருக்கிறாரேஎன்று. ஆனால் கருணாநிதி 6 மாதத்திலேயே தூற்ற ஆரம்பித்து விடுவார்.

கருணாநிதி யாரை எதிர்த்து கறுப்புக்கொடி ஊர்வலம் நடத்தினார்? மத்திய அரசை எதிர்த்தா? கருணாநிதிக்கு இந்தியை எதிர்க்கும் தைரியமிருந்தால் மணியார்டர் பாரங்களை வாங்கி கொளுத்தட்டுமே? ரயில் நிலையங்களில் இந்தி எழுத்துக்களை அழிக்கட்டுமே பார்க்கலாம்.

ரயில்களில்- வங்கிகளில்- தபால் அலுவலகங்களில்- டெலிவிஷனில் இந்திநுழைகிறது என்று கருணாநிதி எழுதுகிறாரே யாரை

(2-ம் பக்கம் பார்க்க)

தேசத்தந்தைகாந்திஜிநினைவுநாள்:

# சுதந்திரப் போராட்ட தியாகிகளுக்குமுதல்வர் தலைமையில் அஞ்சலி

சென்னை ஜன. 30— தேசத் தந்தை காந்திஜியின் நினைவு நாளை முன்னிட்டு தியாகிகள் தினம் அனுஷ்டிக்கப்பட்டது. கோட்டையில் முதல்வர் புரட்சித்தலைவர் தலைமையில் பல்லாயிரவர் மவுன அஞ்சலி செலுத்தி தீண்டாமை ஒழிப்பு உறுதிமொழியும் ஏற்றுக்கொண்டனர்.

இன்று (ஜனவரி 30-ந் தேதி) தேசப்பிதா மகாத்மா காந்திஜியின் நினைவுநாள்- விடுதலைப் போரில் உயிர் நீத்த தியாகிகள் தின- நிகழ்ச்சி இன்று கோட்டையில் உள்ள ராணுவத்திடலில் நடந்தது.

இந்தநிகழ்ச்சியில் கலந்து கொள்ள இன்று பகல் 10-27 மணிக்கு கோட்டை ராணுவத் திடலுக்கு முதல்வர் புரட்சித் தலைவர் வந்தார். அவரைத் தலைமைச் செயலாளர் கார்த்திகேயன் வரவேற்றார், சட்டப்பேரவைத் தலைவர் முனுஆதி, மேலவைத் தலைவர் ம பொ சி, அமைச்சர்கள் பண்ருட்டி, கே. ஏ. கே., ஜி.ஆர் எட்மண்ட், ஆர் எம். வீ, கே. நாராயணசாமி, சவுந்தரபாண்டியன்,ராசா முகமது, பி. டி எஸ், சுப்புலட்சுமி ஜகதீசன் மற்றும் அதிகாரிகளும் அரசு ஊழியர்களும்,பல்லாயிரக்கணக்கான பொதுமக்களும்இந்த நிகழ்ச்சியில் பங்கேற்றனர்.

10-58 மணிக்கு சங்கு ஒலித்தது ராணுவத்தினர் குழல் ஒலியுடன் ஆயுதங்களை வானத்தை நோக்கியும் பின்பு நிலத்தை நோக்கி தாழ்த்தியும் “நீத்தார் அஞ்சலி” செலுத்தினர். பின்பு 2 நிமிடம் மவுனம் அனுஷ்டிக்கப்பட்டது.

அதன்பின் தீண்டாமை ஒழிப்பு உறுதிமொழியை முதல்வர் புரட்சித் தலைவர் தலைமையில் கூடியிருந்தோர் ஏற்றனர்.

கீழ்க்கண்ட உறுதிமொழியை ஒவ்வொரு வார்த்தையாக முதல்வர் சொல்ல கூடியிருந்தோர் திருப்பிச் சொன்னார்கள். உறுதிமொழி வருமாறு:-

இந்திய அரசியல் அமைப்பின் பால் இடைவிடாத உளமார்ந்த பற்றுள்ள இந்திய குடிமகனாகிய நான் நமது அரசியல் அமைப்பின்படி தீண்டாமை ஒழிக்கப்பட்டுவிட்டது என்பதை அறிவேன்.

தீண்டாமையை அடிப்படையாக கொண்டு எவர் மீதும் சமூகவேற்றுமையை மனம் வாக்கு செயல்என்ற எந்த வகையிலும் கடைப்பிடிக்க மாட்டேன் என்று இதனால் உளமாற உறுதியளிக்கிறேன்.

அரசியல் அமைப்பின் அடிப்படைக் கருத்துக்கிணங்க சாதி சமய வேறுபாடற்ற சமத்துவ சமுதாயத்தை உருவாக்குவதில் நேர்மையுடனும் உண்மையுடனும் பணியாற்றுவது எனது கடமையாகும் மேலும் தீண்டத்தகாதவர்கள் என்ற கொடுமைக்கு ஆளாகி உள்ள மக்களிடையே காணப்படும் தீண்டாமை உணர்வினையும் போக்குவது நமது சமூக கடமை என்பதனையும் உணர்ந்து செயல்படுவேன். இந்திய அரசியலமைப்பின்பால் எனக்குள்ள முழுப்பற்றிற்கு இது என்றென்றும் எடுத்துக்காட்டாக விளங்கும் என்றும் இதனால் உளமாற உறுதியளிக்கிறேன்.

# புரட்சித் தலைவர் டெல்லி பயணம்

சென்னை, ஜன. 30- தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் டெல்லி செல்கிறார்.

டெல்லியில் தமிழக திட்டம் பற்றி திட்டக்குழுவுடன் முதல்வர் புரட்சித்தலைவர் பேச்சு வார்த்தை நடத்துகிறார்.

ஜன. 31-பிப். 1, பிப் 2 ஆகிய நாட்களில் முதல்வர் டெல்லியில் தங்கி முக்கிய அலுவல்களை கவனிப்பார்.





# அப்துல் சமது சொத்துபறிமுதல் கோர்ட் உத்தரவு

சேலம், ஜன. 30 தமிழ்நாடு முஸ்லிம் லீக் கட்சியின் தலைவர் ஏ கே ஏ அப்துல் சமது நிர்வாகத்தில் நடத்தி வரும் ஜெனரல் எக்ஸ்போர்ட்ஸ் புல்லர் தி எக்ஸ்போர்ட்ஸ் ஆகிய நிறுவனங்களின் பாக்கி சம்பந்தமாக சமதின் சொத்துக்களை பறிமுதல் செய்யுமாறு கோர்ட் உத்தரவு பிறப்பித்திருக்கிறது.

இதுபற்றிய விவரமாவது:

இந்தியயூனியன் முஸ்லிம் லீக் கட்சியின் தமிழ்நாட்டு கிளை தலைவர் ஏ கே ஏ அப்துல் சமது. இவர் இந்தியாவில் இருந்துவெளி நாடுகளுக்கு கைத்தறி துணிகளை ஏற்றுமதி செய்வதற்கான உரிமம் (லைசென்ஸ்) பெற்றிருந்தார்.

ஜெனரல்எக்ஸ்போர்ட்ஸ் (இந்தியா) புல்லர் தி எக்ஸ்போர்ட்ஸ் (பிரைவேட் லிமிடெட் என்கிற நிறுவனங்களை நடத்திவந்த அப்துல் சமது, அந்த நிறுவனங்களின் பேரிலேயே கைத்தறித்துணிகளை ஏற்றுமதி செய்ய உரிமம் பெற்று இருந்தார். அப்துல் சமத் இந்த நிறுவனங்களை நிர்வகித்து வந்தார்.

அப்துல் சமது நடத்திய இந்த இரு நிறுவனங்களும் பல்வேறு நிறுவனங்களிடமிருந்து கைத்தறிதுணிகளை கடனுக்கு வாங்கி வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்தன.

இப்படி மற்றவர்களிடம் கைத்தறித் துணிகளை கடனுக்கு வாங்கியதற்கு கடன் தொகை நீண்ட நாட்களாகத் திருப்பித் தரப்படவில்லை.

அப்துல்சமது நிர்வகித்து வந்த நிறுவனங்களுக்குக் கடன் கொடுத்த சேலம் பெருமாள் முதலியார் கம்பெனியினர் கடன்தொகையைக் கேட்டு அப்துல்சமது நிறுவனங்கள் மீது வழக்கு தொடர்ந்தனர்.

சேலம் சப் கோர்ட்டில் வழக்கு தொடரப்பட்டது. வழக்கு விசாரணை முடிந்து நீதிபதி தீர்ப்பளித்தார்.

கடன் தொகைக்காக அப்துல் சமதுக்கு சொந்தமான சொத்துக்களை ஜப்தி செய்ய நீதிபதி உத்தரவிட்டார்.

அப்துல் சமதுக்குச் சொந்தமான வீடு, கார், தையல் எந்திரம் ஆகியவற்றை பறிமுதல் செய்ய நடவடிக்கை எடுத்துள்ளனர்.

இதற்காக சேலம் கோர்ட்டில் ஓ. எஸ். எண். 1731-78, 1749-78 ஆகிய எண்களுக்குள்ள இருவழக்குகள் விசாரணையில் இருந்து வருகிறது.

## கர்ப்பூரி மீது லஞ்ச ஊழல் குற்றச்சாட்டு

பாட்னா, ஜன. 30: சட்டமன்ற இடைத்தேர்தலுக்கு 10 ஆயிரம்ரூபாய் லஞ்சம் கேட்டதாக பீகார் முதல் மந்திரி கர்ப்பூரிதாகூர் மீது சஸ்பெண்டு செய்யப்பட்ட பொதுபணித்துறை நிர்வாகப் பொறியாளர் ஹார்வார்வாண்டே குற்றம் சுமத்தியுள்ளார்.

இன்று (30-1-79) பிற்பகல் 3-30 மணிக்கு கலைவாணர் அரங்கில் அரிசனநல வார விழா

புரட்சித்தலைவர் பேசுகிறார்.

# வாழ்விக்க வந்த அண்ணல்



அடடா, ஆண்டுகள் முப்பது ஓடி மறைந்துவிட்டனவா? எல்லாம் நேற்று நடந்தன போலன்றோ நிழலாடுகின்றன? அதோ அந்தப் பொன்னார்மேனியனை, உலகில் யாருக்குமே ஒரு தீங்கும் நினைக்காத உத்தமனை, ஒரு நொடிப் பொழுதையும், வீணாக்காது உலகத் தொண்டுக்கே செலவழித்து மற்றவர் தவறுக்கு தான் பட்டினி கிடந்து கழுவாய் தேடிய அந்தப் புண்ணியனை நாம் இழந்து முப்பது ஆண்டுகள் ஆகிவிட்டனவா?

அடிமைத் தனத்தையே அரும்பூணாரமாகக் கொண்டிருந்தமக்கள் உணர்ச்சியை வெளிக் கொணர்ந்து விடுதலைப் போரில் ஈடுபடுத்திய அந்தத் துறவியை இழந்து 30 ஆண்டுகள் ஓடிவிட்டனவா?

களிமண்ணைக் கொண்டு சேனை வீரர்களைப் போன்ற பொம்மைகளைச் செய்து அந்த பொம்மைகளுக்கு உயிரூட்டி உண்மை வீரர்களாக்கி, அவர்களைக் கொண்டே போரில் வெற்றி பெற்றான் ஒருவன் என்று விக்கிரமாதித்தன் கதை கூறும்.

அவ்வண்ணம் களிமண் பொம்மைகளாக இருந்த நம்மை மனிதர்களாக்கி வீரர்களாக்கி- நம்மைக் கொண்டு போர் புரிந்து மாபெரும் சாம்ராஜ்யத்தை- சூரியன் அஸ்தமிக்காதஒரு சாம்ராஜ்யத்தை- புறங்கண்ட அந்த மாவீரத் துறவியை இழந்து 30 ஆண்டுகள் பறந்து விட்டனவா?

உலகில் யார் மீதும் வெறுப்புக்காட்டாத- அன்பையும் நட்பையுமே காட்டிய அந்த உலகப் பெரியவர் நமக்குச் சுதந்திரத்தை வாங்கித் தந்தார்.

சுதந்திர நாட்டின்முதல் ஆளுநராக யாரை நியமிப்பது என்ற பிரச்சினை தோன்றியது. ஏனெனில் அநேக தலைவர்கள் அந்தத் தகுதி பெற்றிருந்தனர்.

இந்தப் பெரியவரே இப்பிரச்சினைக்கு முடிவு காண வேண்டும்.

இதுவரை அரசப் பிரதிநிதியாக இருந்து நம்மை ஆண்ட அந்த லார்ட் மவுண்ட் பேட்டனையே முதல் கவர்னர் ஜெனரலாக நாம் நியமிப்போம் என்றார் அண்ணல்.

இப்படி அவர் சொன்னதும் பலருக்குத்திகைப்பாக இருந்தது. "என்ன இது. யாரை இந்த நாட்டை விட்டு வெளியேபோ எனக் (Quit India குரல் கொடுத்து வெற்றி கண்டாரோ அதே எதிரி நபரையே முதல் ஆளுநராக்க வேண்டும் என்று கூறுகிறாரே" எனத் திகைத்தனர்.

இந்த இடத்தில் தான் ஒரு தத்துவமே புதைந்துள்ளது. நாம் வெள்ளையர்களை வெறுக்கவில்லை, அவர்களின் ஆட்சியைத் தான் வெறுத்தோம். இப்பொழுது அவர்களின் ஆட்சி அகன்றுவிட்டது நம் நல்லெண்ணத்தை உலகிற்கு உணர்த்த அந்த வெள்ளையரையே முதல் தலைவராக நியமிப்போம் இதுதான் அந்தத் தத்துவம்.

அப்படியே நடந்தது.

அந்தப் பெரியவர் நடத்திய இயக்கங்கள் ஒன்றா, இரண்டா?

'உலகின் துன்பங்களுக்கெல்லாம் காரணம் அவா. அதனை அறுத்தெறி' என்று கூறினார் புத்த பெருமான். பற்றுக்களையெல்லாம் துறந்தவனுக்குத்துன்பமே இல்லை என்பது உண்மையே. அந்த ஆசிய ஜோதி புத்தபெருமானுக்குப் பின் தோன்றிய இந்த உலக ஜோதியான துறவி என்ன செய்தார்? தம்மளவில் எல்லா ஆசைகளையும்துறந்தார். 36 வயதிலேயே உடலின்பத்தை உதறினார். பிள்ளைகள், உற்றார் உறவினர் என்ற பாசம் அனைத்தையும் முன்னரே உதறி எறிந்து விட்டார், ஆனால் எந்தத் துறவியும் அதுகாறும் செய்திராதவாறு மற்ற அனைவரது பிரச்சினைகளையும் தம்மீது தாமே போட்டுக் கொண்டு தீர்வு காண்பவரானார்,

இப்படி ஒருவரை உலகம் கண்டதில்லை, இனி காணப் போவதும் இல்லைதான்.

நாட்டின் தரித்திரத்தைக் கருதி ஒவ்வொருவரும் தம் தேவையைக் கூடியவரை குறைத்துக் கொள்ளவேண்டும் என்ற எண்ணம் அவருக்கு, நாம் பிறந்த இந்த தமிழ் பூமியில்தான் உதித்தது.

இடுப்பில் எட்டு முழ வேட்டி, உள்ளுக்குள்ளே பனியன், அதன்மீது ஒரு முழுக்கை சட்டை, தலையின் மீது ஒரு மூட்டையே அமர்ந்தது போன்ற தலைப்பாகை, இந்தக் கோலத்துடன் அவர் தமிழ்நாட்டில்சுற்றுப்பயணம் செய்தார். மதுரை அருகில் ஒரு வயலில் ஓர் உழவன் கோவணம் ஒன்றை அணிந்து தலையில ஒருசிறு முண்டாசுடன் வேலை செய்வதைப் பார்த்தார்.

'அந்த மனிதன் ஏன் சட்டை வேட்டி அணிந்து கொள்ளவில்லை?' என்று பக்கத்திலிருந்தவரைக் கேட்டார். அந்த உழைப்பாளிக்கு சட்டை தைத்துக் கொள்ளுமளவுக்குபொருள் வசதியில்லை என்ற பதில் கிடைத்தது.

"அப்படியாயின் நான் ஏன் இத்தனை துணிகளை அணிந்திருக்கிறேன். நாளையிலிருந்து, என் இடையில் ஒரு வேட்டியும் ஒரு துண்டும் மட்டுமே அணியப் போகிறேன்" என்று சொன்னார். அதன்படியே வாழ்நாள் முழுதும்- தம் உடல் சாயும் வரை- ஒரு வேட்டி ஒரு துண்டு இவற்றுடனே காலத்தைக் கழித்தார்.

சின்னவனாகிய இந்த எளியவன் அவரை நேரே கண்ணாரக் கண்டவன். அவர் தம்பெயரைக் கேட்ட மாத்திரத்திலேயே உணர்ச்சி பொங்கும் இயல்பைப் பெற்றிருந்தவன். அவர் பேரால் நடந்தஇயக்கத்தில்சிறிதளவேயாயினும் பங்கும் கொண்டவன்.

இன்றைய உலகத் தலைவர்கள் அவர் தமது உபதேச மொழிகளைக் கடைபிடித்து செயல்படுவார்களேயானால் எந்த ஒரு துன்பமும் நேராது என்பது திண்ணம்.

இதோ மகாகவி பாரதி கூறுகிறான்:

வாழ்க நீ எம்மான் இந்த
வையத்து நாட்டி
லெல்லாம்
தாழ்வுற்று வறுமை மிஞ்சி
விடுதலை தவறிக்கெட்டு
பாழ்பட்டு நின்றதாமோர்
பாரத தேசந்தன்னை
வாழ்விக்க வந்த காந்தி
மகாத்ம நீ வாழ்க
வாழ்க!

பாரத தேசம் ஒன்றை மட்டுமா வாழ்விக்க அவர் வந்தார்? உலகம் முழுவதுமே வாழ்வதற்காக அன்றோ வந்தார்? அவர் தம நெறி நின்றால் இன்றும் உலகம் துயர்நீங்கி வாழும். வாழ்க மகாத்மா.

"சின்னவன்"



## திருச்சியில் அரிசனநல வாரவிழா: சவுந்திர பாண்டியன் பங்கேற்றார்

திருச்சி, ஜன. 30- அமைச்சர் சவுந்திரபாண்டியன் முசிறி தொட்டியம் தா. பேட்டை, ஆகிய ஊராட்சி ஒன்றியங்கள் ஏற்பாடுகள் செய்துள்ள பள்ளி கட்டிட திறப்புவிழா தண்ணீர் தொட்டி திறப்பு விழா, காலனிதிறப்புவிழா ஆகிய நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டார். திருச்சிதேவா ஹாலில்நடைபெற்ற அரிசன நல வார விழாவில் அரிசன நல அமைச்சர் சவுந்தரபாண்டியன் தலைமையேற்று உரை நிகழ்த்தினர். மாவட்ட மாவட்ட மக்கள்தொடர்பு அதிகாரி கே. நடராஜன், வரவேற்றார். அரிசன நல துறை அலுவலர் கோலப்பன் விழா நிகழ்ச்சிகளை சிறப்புற செய்திருந்தார். விழாவில் கழக நாடாளுமன்ற உறுப்பினர் அசோக்ராஜ். சேவியர் துரைராஜ் ஆகியோர் உரை நிகழ்த்தினார்கள்.

சென்னை எஸ் எம் ஆனந்தன் குழுவினரின் இசை நிகழ்ச்சிகளுடன் விழா நிறைவு பெற்றது.

# கருணாநிதிக்கு ப. உ. ச. சாட்டை... [முதல் பக்கத் தொடர்ச்சி]

எதிர்த்து எழுதுகிறார்? ஜார்ஜ் பெர்னாண்டசை எச். எம். பட்டேலை- அத்வானியை - மதுதண்டவதேயை எதிர்த்துதானே? தைரியமிருந்தால் அவர்களது பேரை குறிப்பிட்டுஎழுதட்டுமே பார்க்கலாம்.

ஐ. நாவில் வாஜ்பாயி இந்தியில் பேசியதை கருணாநிதி கண்டித்தாரா? நான்கு மாநில முதல்வர்களையும் அழைத்து இந்தி திணிப்பை எதிர்த்து தீர்மானம் போட்டு வைத்தாரே புரட்சித்தலைவர் அதற்காக ஒரு வார்த்தை பாராட்டக் கூடாதா?

## அடிப்பது யாரை?

குங்குமம் இதழில் இந்தி என்ற பாம்பு சீறி வருகிறதாம், கருணாநிதியும், மற்றவர்களும் தடியால் அடிக்கப் போகும் போது புரட்சித்தலைவர் அவர்களை வாருங்கள் பசித் தீர்த்த பின் அடிப்போம்' என்று கூறுவது போல் கார்ட்டூன் போட்டிருக்கிறார்கள்.

கருணாநிதியை கேட்கிறேன் நீங்கள் அடிக்கப் போகும்பாம்பின் பிடாரன் யார்?

மொரார்ஜி அல்லவா? அடிப்பது பாம்பையா? பிடாரனையா?

இந்தியை நுழைக்க நினைக்கும் வெறியர்களுக்குச் சொல்கிறேன் இந்தி எந்த ரூபத்தில் நுழைந்தாலும் இங்கே யாரும் நடைபாவாடை விரிக்க மாட்டோம்.

தமிழ் அழியவேண்டும் என்றால அதற்கு முன் இந்த உடல் அழிய வேண்டும். மொழி அழிந்து வாழும் வாழ்வு வேண்டாம்.

65ல் கறுப்புக் கொடி என்று அண்ணா சொன்னார் இப்போது நான் சொல்கிறேன் என்றார் கருணாநிதி.

1950 ஆண்டு எழுதப்பட்ட அரசியல் சட்டம் 15 ஆண்டுகளுக்கு பிறகு இந்தி ஆட்சி மொழியாகும் என்று கூறியது. அதனால் தான் 1965-ம் ஆண்டு ஜனவரி 26-ந்தேதி விடியற்காலை இந்தி தான் ஆட்சி மொழி என்பதைஉணர்த்தி நமது துக்கத்தை தெரிவிக்க 25-ந்தேதி கண்டனகூட்டம் போட்டும் 26-ந்தேதி வீடுகளில் கறுப்புக்கொடியும் ஏற்றுங்கள் என்று அண்ணாசொன்னார்.

1964ம் ஆண்டோ, 66ம் ஆண்டோ சொல்லவில்லை. 65ம் ஆண்டு மட்டும்தான் சொன்னார்.

பின்னர் நேரு அவர்கள் 'இந்தி வேண்டுமா வேண்டாமா என்கிற பொறுப்பை இந்தி பேசுகிறவர்களிடம் விடமாட்டேன் இந்தி பேசாதவர்களிடம் தான்விடுவேன் அவர்கள் விரும்பினால்தான் இந்தி ஆட்சி மொழியாகும் என்று உறுதியளித்தார்.

## புரட்சித்தலைவர் அன்றேசொன்னார்

புரட்சித்தலைவர் தமிழக மேலவை உறுப்பினராக இருந்தபோது 1962ம் ஆண்டே இந்தி திணிப்பை எதிர்த்து பேசியிருக்கிறார். அதை கல்கி இதழ் வெளியிட்டிருக்கிறது. "இந்தியாவிலுள்ள 14 மொழிகளையும் தேசிய மொழி ஆக்குங்கள் கஷ்டம் பணச்செலவாகுமே என்று கோழைதான் சொல்வான், ஆட்சி நடத்துபவர்கள் சொல்லக்கூடாது' என்று பேசியிருக்கிறார்.

இன்றைக்கு இந்தியைத் திணிப்பது யார்? மத்தியில் ஆட்சி செய்வது ஜனதா கட்சி அல்லவா? கருணாநிதியின் வாயில் ஜனதாபெயர் வரமறுக்கிறதே?

சென்னையிலே பேசிய மொரார்ஜி பாண்டிச்சேரியை தமிழகத்துடன் இணைப்போம் என்றதால் இப்போது பாண்டிச்சேரியில் ஊரடங்கு சட்டம் வந்துள்ள நிலையை பார்க்கிறோம்.

மொரார்ஜியின் பிடிவாதத்தினால தமிழகம் ரணகளம் ஆகிவிடக் கூடாது, ஆக்கிவிடாதீர்கள் என்று மொரார்ஜியை கேட்டுக்கொள்கிறேன்.

## ராமாவரம் போனமுடி

திமுகவிலிருந்து போனவன் தலையிலிருக்கும் முடி போய் விட்டது போன்றவன் என்று ஆசைத்தம்பி பேசியிருக்கிறார்.

ஆசைத்தம்பி நினைப்பது முளைக்கிற முடியை. நான் நினைப்பது 67ல் மக்கள் வைத்த முடியை. அது கோபாலபுரத்தாரிடமிருந்து ராமாவரத்தாரிடம் போய்விட்டது.

(பலத்த கைதட்டல்)

அண்ணா குல்லா போடச் சொன்னாரா என்று கருணாநிதி கேட்கிறார். புரட்சித்தலைவர் தன் தலைக்குத்தான் போட்டுக் கொண்டாரே தவிர அடுத்தவர் தலைக்குகுல்லாபோடவில்லை.

திராவிடா இயக்கப் பாரம்பரியத்தை அழித்து விடாதீர்கள் என்று கருணாநிதியைக் கேட்டுக் கொள்கிறேன்.

இருந்தால் நான்தான் இருக்கவேண்டும் இல்லையேல் இயக்கம் அழியவேண்டும் என்று பெரியாரும், அண்ணாவும் நினைத்ததில்லை

வருங்கால சமுதாயத் திட்ட இயக்கத்தை அளிக்க வேண்டும் வரலாற்று வரிகளாக மாற்றிவிடாதீர்கள் என்று கருணாநிதியை கேட்டுக்கொள்கிறேன்.

தலைமை ஏற்கத்தயாரா? என்று முதலவரை அழைத்துவிட்டு, 'தயார்! நீங்கள் வருகிறீர்களா?' என்றவுடன் 'நீயார் என்னை கூப்பிட, உன் பின்னால் நான் வரத்தயாரில்லை என்கிறார் கருணாநிதி.

## கருணாநிதிக்கு சவால்

திருச்சியிலே- இந்தியையே எதிர்ப்பேன் என்ற கோஷம். அது யாரை எதிர்த்து? மத்திய அரசை எதிர்த்து அல்லவா? கருணாநிதி போடுகிற கோஷமே மதிலாக நின்று விடும் என நினைக்கிறார்.

நரபலி களபலிக்கு நான் தயார் என்று கருணாநிதி எழுதுகிறார் அப்படி எழுதாதீர் என்று புரட்சித் தலைவர் கேட்டுக்கொண்டுள்ளார் கருணாநிதி எழுதுவது தொண்டர்களுக்கு உணர்ச்சியூட்ட-பலி கொடுக்க அல்ல.

எதிரியேஇல்லாதபோது களத்தில் யாரை எதிர்ப்பது? மத்திய அரசை எதிர்த்தா?

இந்தி, சமஸ்கிருதப் ஆகிய இரண்டு மொழிகளுக்கு மட்டும்தான் தனி டைரக்டரேட் உள்ளது இந்திடைரக்டரேட் அளிக்கும் பணத்தில்தான் தமிழ் கன்னடம், தெலுங்கு. மலையாளம் மொழிவளர்ச்சிக்கு பயன் படுத்தப் படுகிறது. எல்லாமொழிக்கும் தனித்தனி டைரக்டரேட் அமைக்கப் போராட நாங்கள் தயார். கருணாநிதி தயாரா?

## இந்திதான் ஆட்சிமொழி என்றால்...

கோவை மாநாட்டில் நாஞ்சிலார் முழங்கியது போன்று இந்திதான் ஆட்சிமொழி என்றால் இந்தியாஒன்றல்ல இந்தியா ஒன்று என்றால் இந்தி ஆட்சிமொழி அல்ல, இந்தியாவிலேயே உள்ள 15 மொழிகளும் ஆட்சி மொழியாக வேண்டும்.

நேரு கூறியது போல, இந்தி ஆட்சி மொழி என்றால் இந்தியா துண்டுதுண்டாக வேண்டுமா என்பதை தீர்மானிக்க வேண்டியவர்கள் இந்தி பேசுபவர்களே.

இவ்வாறு ப. உ. சண்முகம் பேசினார்.

# நேதாஜி பிறந்தநாள் விழா அமைச்சர் காளிமுத்து பங்கேற்பு

மதுரை, ஜன. 30 தமிழ்நாடு அரசின்சார்பில் நேதாஜியின் பிறந்தநாள் விழா மதுரையில் கொண்டாடப்பட்டது.

உள்ளாட்சித்துறை அமைச்சர் கா காளிமுத்து விழாவில் கலந்துகொண்டு நேதாஜி சிலைக்கு மாலை அணிவித்து, தமிழ்நாடு இந்திய தேசிய ராணுவ வீரர்களின் அணிவகுப்பு மரியாதையை ஏற்றார்.

மாவட்ட ஆட்சித் தலைவர் பி சி சிரியாக் விழாவுக்குத் தலைமை தாங்கினார்,

அமைச்சர் கா. காளிமுத்து, மேயர் எஸ் முத்து, துணை மேயர் கே எஸ் சந்தானம், நாடாளுமன்ற உறுப்பினர் கே மாயத்தேவர், சட்டமன்ற உறுப்பினர்கள் நா. லெட்சுமிநாராயணன், டி. பி. எம் பெரியசாமி, மற்றும் ஆர் சக்திமோகன், க மகாமணி ஆகியோர் விழாவில் பேசினார்கள்.

ஆட்சித்தலைவரின் தனி உதவியாளர் ஏ சிவகுருநாதன் நன்றி கூறினார்.

விழாவில் அமைச்சர் காளிமுத்து பேசுகையில் கூறியதாவது,

நேதாஜி பிறந்த பொன்னாளை தமிழக அரசு எழுச்சியோடு கொண்டாடி வருகிறது.

ஒரு புரட்சித்தலைவரை (நேதாஜி) பற்றி இன்னொரு புரட்சித் தலைவர், புரிந்துகொள்ள முடியும் என்றால் அதுமிகையாகாது

இந்திய விடுதலைக்கு அதிக விலை தந்த மாநிலங்கள் தமிழகமும், வங்கமும் தான். தமிழ்நாட்டில் சுதந்திர கிளர்ச்சியை தேவரும், வங்கத்தில் நேதாஜியும் மூட்டினார்கள்.

நாட்டில் பொருளாதார விடுதலையை நேதாஜிவிரும்பினார், இன்னொரு புரட்சி நடந்தால்தான் பொருளாதார விடுதலை கிடைக்கும்.

இவ்வாறு அமைச்சர் காளிமுத்து பேசினார்

## மேயர் முத்து

மேயர் முத்து கூறியதாவது

பகுத்தறிவுவாதிகளாகிய நாங்கள் முற்போக்குக் கொள்கை உடையவர்களைப் பின்பற்றி வந்திருக்கிறோம், புரட்சித் தலைவரின் தலைமையிலான இந்த அரசு முற்போக்கு அரசு.

தலைவர்களின் பிறந்த நாட்களை அரசு விழாவாக நடத்துவது புரட்சித்தலைவர் அரசு.

இமயம் முதல் குமரி வரை விடுதலைக்குப் பாடுபட்ட ஒரு தலைவருக்கு வங்கத்திலும் தமிழகத்திலும் மட்டும்தான் விழா நடைபெறுகிறது.

காந்திஜி, நேருஜி விழாக்கள்போல நேதாஜியின் விழாவும் அகில இந்தியாவிலும் கொண்டாடப்பட வேண்டும்,

இவ்வாறு மேயர் முத்து பேசினார்.

## சென்னை-செங்கை மாவட்ட மகளிர் பிரிவுத் தோழியர்களுக்கு...

வருகின்ற 4-2-79 ஞாயிறு அன்று மாலை 5-00 மணியளவில் சென்னை-செங்கை மாவட்ட மகளிர் பிரிவு ஆலோசனைக் கூட்டம் அனைத்திந்திய அண்ணா தி.மு. கழகத் தலைமை நிலையத்தில் நடைபெறும். அவ்வமயம் சென்னை, செங்கற்பட்டு மாவட்டங்களைச் சார்ந்த நாடாளுமன்ற, தொகுதி, நகர, வட்ட மகளிர் பிரிவு அமைப்பாளர்கள் அனைவரும் தவறாது கலந்து கொண்டு சிறப்பிக்க வேண்டுகிறேன்.

★ ★ ★

## மகளிர் பிரிவுத் தோழியர்களுக்கு

பேரறிஞர் அண்ணா அவர்களின் 10 வது நினைவு நாளை ஒட்டித் தலைமைக்கழக அறிவிப்பிற்கிணங்க நம்முடைய இதயதெய்வம் மாண்புமிகு புரட்சித்தலைவர் அவர்களின் தலைமையில் 3-2-79 சனிக்கிழமை காலை 7-00 மணியளவில் சென்னை இராஜாஜி மண்டபத்தின் முன்பிருந்து அறிஞர் அண்ணா சதுக்கம் நோக்கிப் புறப்படும் அமைதி ஊர்வலத்திற்கு சென்னை மாவட்ட மகளிர் பிரிவுத் தோழியர்கள் அனைவரும் தவறாது திரளாகக் கலந்து கொள்ள அன்புடன் வேண்டுகிறேன்.

அது போன்றே அன்றைய தினம் நாடெங்கிலும் கழகப் பொறுப்பாளர்களால் நடத்தப்படவிருக்கும் அறிஞர் அண்ணா நினைவு நாள் அமைதி ஊர்வலங்களில் ஆங்காங்கே உள்ள மகளிர் பிரிவுத் தோழியர்கள் தவறாது பங்கேற்றுச் சிறப்பிக்க அன்புடன் வேண்டுகிறேன்.

சென்னை-14
30-1-79

பா. வளர்மதி,
மகளிர் பிரிவுச் செயலாளர்

## சென்னை மாவட்ட தொகுதி வட்ட அமைப்பாளர் கூட்டம்

சென்னை மாவட்ட தொகுதி வட்ட அமைப்பாளர்கள் கூட்டம் 31-1-79 புதன்கிழமை மாலை 6 மணி அளவில், தலைமைச் செயலகத்தில் (275, அவ்வை சண்முகம் சாலை, இராயப்பேட்டை, சென்னை-14) நடைபெறும். கழகப் பொதுச்செயலாளர் டாக்டர் நாவலர் அவர்கள் தலைமை தாங்குவார்கள்.

3-2-79 அன்று அறிஞர் அண்ணா நினைவு நாளையொட்டி நடைபெறும் அமைதி ஊர்வலம் பற்றியும், கழக ஆக்கப் பணிகள் பற்றியும் பொதுச்செயலாளர் கருத்துக்கள் கூறுவார்.

நாடாளுமன்றத் தொகுதி அமைப்பாளர்களும், சாபுமன்றச் செயலாளர்களும், மகளிர் மாணவர் தொழிற்சங்கப் பேரவை அமைப்பாளர்களும் கூட்டத்தில் கலந்துகொள்ளுமாறு கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்

சென்னை-14
30-1-79

எம். எஸ். அப்துல் காதர்,
தலைமை நிலையச் செயலாளர்,
அனைத்திந்திய அண்ணா தி மு கழகம்

## தமிழக அரசுக்கு மாநகராட்சி தொழிலாளர்கள் சங்கம் பாராட்டு

சென்னை, ஜன, 30- சென்னை மாநகராட்சி லாரி மோட்டார் பொது தொழிலாளர்கள் சங்கத்தின் சார்பில் வள்ளுவர் தினவிழா நடைபெற்றது. மாநகராட்சி டிரைவர்கள் லைசென்சை புதுப்பிக்கும் செலவை அரசே ஏற்றுக் கொண்டதற்கு சங்கம் பாராட்டு தெரிவித்தது.

## புரட்சித்தலைவர் நேரில் வந்து மக்களிடம் மனுக்களைப் பெற்றார்

சென்னை, ஜன. 30- முதல்வர் புரட்சித்தலைவர் இன்று கோட்டையில் நூற்றுக் கணக்கானவர்களிடம் மனுக்களை பெற்றார்.

புரட்சித்தலைவர் தலைமைச் செயலகத்திலிருந்து வெளியே வரும் போது மரத்தடியில் நூற்றுக் கணக்கான மக்கள் நின்று கொண்டிருப்பதைப் பார்த்துவிட்டு அவர்களை அருகில் அழைத்தார்.

அவர்கள் கொடுத்த மனுக்களை பெற்றுக்கொண்டு குறைகளைக் கேட்டு அறிந்தார். ஆவன செய்வதாகக் கூறினார்.

மனுக்களை முதல்வரிடம் நேரில் அளித்த மக்கள் மகிழ்ச்சியோடு சென்றனர்.

## பிப். 3 காலை 8 மணிக்கு அண்ணா அஞ்சலி அமைதி ஊர்வலம்

3-2-79 சனிக்கிழமை அறிஞர் அண்ணா அவர்களின் 10-வது நினைவு நாள் ஆகும்.

அன்று காலை 8 மணி அளவில், மாண்புமிகு தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் அவர்களின் தலைமையில், அஞ்சலி செலுத்தும் அமைதி ஊர்வலம் இராஜாஜி மண்டபத்தின் முன்பிருந்து புறப்பட்டு, அண்ணாசாலை, வாலாசாசாலை, கடற்கரைச்சாலை வழியாக சென்று அறிஞர் அண்ணா சதுக்கத்தை அடையும்.

ஊர்வலத்தினர் பேரறிஞர் அண்ணா அவர்களின் கல்லறைமீது மலர் வளையம் வைத்து அஞ்சலி செலுத்துவார்கள்.

ஊர்வலத்தில் தலைமைக்கழக நிருவாகிகள் அமைச்சர் பெருமக்கள், நாடாளுமன்ற- சட்டமன்ற உறுப்பினர்கள், கழக மன்ற அமைப்பாளர்கள், செயல்வீரர்கள், ஆதரவாளர்கள் பொதுமக்கள் ஆகியோர் அனைவரும் புரட்சித் தலைவர் அவர்களைத் தொடர்ந்து அணிவகுத்துச் செல்வார்கள்.

நாடெங்கணுமுள்ள, குறிப்பாக சென்னை மாவட்டத்திலுள்ள கழகப் பொறுப்பாளர்கள், செயல்வீரர்கள், உறுப்பினர்கள் ஆதரவாளர்கள் அனைவரும் அறிஞர் அண்ணா அவர்களுக்கு அஞ்சலி செலுத்தும் அமைதி ஊர்வலத்தில் கலந்து கொள்வதைத் தங்கள் தலையாய நீங்காக் கடமையாகக் கொண்டு அணி அணியாகத் திரண்டு வரக் கேட்டுக் கொள்கிறேன்.

வெளியூர்களிலும்-நகரங்களிலும் உள்ள கழகத்தவர்கள் ஆங்காங்கு அமைதி ஊர்வலம் நடத்தி அறிஞர் அண்ணாவின் சிலை அல்லது உருவப்படம் வைத்துள்ள மேடையின்மீது மலர்வளையம் வைத்து அஞ்சலி செலுத்துமாறு கேட்டுக் கொள்கிறேன்.

சென்னை-14
29-1-79

இரா. நெடுஞ்செழியன்,
பொதுச்செயலாளர்

## நன்செய் இடையாறு மக்கள் அரசுக்கு நன்றி

சேலம், ஜன. 30- சேலம் மாவட்டம், நாமக்கல் வட்டத்தில் நன்செய் இடையாறு பொதுமக்களின் நீண்டநாள் கோரிக்கையான நாமக்கல்- நன்செய் இடையாறு வழி வள்ளிபுரம் டவுன் பஸ் போக்குவரத்து வசதியை செய்துள்ள கழக அரசுக்கு நன்செய்- இடையாறு மக்கள் நன்றி தெரிவித்துள்ளனர்.

*

## சித்தலிங்க மடத்தில் நடந்த அரிசன நல தின விழா

திருவெண்ணைநல்லூர் ஜன. 30- சித்தலிங்கமடம் ஊராட்சியில் அரிசன நல தினவிழா கொண்டாடப்பட்டது. மேல் நிலை நீர்த் தேக்கத்தொட்டி அன்று திறந்து வைக்கப்பட்டது. இந்துக்களும் அரிசனங்களும் சமபந்தி உணவு உண்டனர். 150 ஏழை அரிசன மாணவர்களுக்கு இலவசமாக உடைகள் வழங்கப்பட்டன. பி அய்யாகண்ணு, பி எஸ் பாண்டியன், ஜமீக வாசுதேவன், ச டே சாமுவேல் சண்முகம் ஏ ஆர் கண்ணன் ஆகியோர் பேசினர்.

பயணக் கட்டுரை:

## எழுத்துவடிவத்தில்உள்ள உணர்ச்சிக் கொந்தளிப்பு

வெளிநாட்டுப் பயணம் முடித்து விட்டு நேராக ஊட்டி வந்த புரட்சித் தலைவர், சாவகட்சிப் பிரதிநிதிகளைச் சந்தித்தார். அப்போது, நிவாரணப்பணிகளை முறையாக மேற்பார்வையிட அனைத்துக் கட்சி குழுவொன்றை அமைத்துக் கொள்ள கூறியிருந்தார் அங்கீகரிக்கப்பட்ட கட்சிகளுக்கு ஒரு உறுப்பினா என்ற அளவில் குழு இருக்கலாம். அக் குழு அவ்வப்போது கூடி கட்சி

[8]

வேறுபாடு மறந்து பொது நன்மைகளில் ஒன்றுபட்டுச் செயலாற்றலாம்.

மாவட்ட ஆட்சிதலைவரும் அவர்கள் கூறும் ஒருமித்த ஆலோசனையைக் கருத்தில் கொண்டு காரியமாற்றலாம் என்றார். இப்படி ஊட்டியில் அமையும் குழு, நிவாரணப்பணிகள் முடிந்த பின்னரும் செயல்பட்டு தமிழ்நாட்டிற்கே வழிகாட்டும் நிலையில் அமையலாம் என்ற கருத்துப்படி அறிவுரை கூறியிருந்தார்.

முதல் முறை இரண்டு மணி நேரத்திற்கு மேல் அனைத்துக்கட்சிஉறுப்பினர்களுடன் உரையாடி அனைவா உள்ளமும் கவ

தார், அதன் விளைவுதான் கூடலூர் சட்ட மன்ற தி. மு. க. உறுப்பினர் உச்சிகவுடர்கூட ''முதல்வர் நிவாரணப்பணிகளில் அக்கறை காட்டி செயல்படுவதைப் பார்க்கும் போது அவர் காலில் விழுந்து நன்றி தெரிவிக்கத் தோன்றுகிறது'' என்று மனம் திறந்து பாராட்டியது நினைவு கொள்ளத் தக்கது.

உதகை அரண்மூர் மாளிகையின் மாடியிலிருந்து கீழ் அறைக்குப் போகிறோம் சிவப்பு நிற விரிப்பின் மேல் சுற்று வட்டமாக நூறுபேர் அமரக்கூடிய நீண்ட வடிவிலான மேஜை. மன்னருக்குச் சொந்தமாக அரண்மூர் மாளிகை இருந்தபோது அந்த இடம் நடன மண்டபமாக பயன்படுத்தப் பட்டதாம். அலங்காரமான அந்த அறையில், அரசியல் கட்சிப் பிரதிநிதிகள் அமர்ந்திருக்கின்றனர். தலைவரிடம் மக்கள் குழு அமைத்து விட்டோம என்றுஒருவர் சொல்கிறார். மற்றொருவர் 'இதோ லெட்டர் பேட்' என்கிறார். சட்டமன்ற உறுப்பினர் கோபால் ஒரு திருத்தம் தெரிவிக்கிறார். பின்னர் புரட்சித்தலைவர் இக்குழு அமைப்பு முறையில் சில மாற்றங்கள், அனைவரும் ஏற்றுக்கொள்ளும் வகையில் தெரிவிக்கிறார். தொடர்ந்து நிவாரணப் பணிகள் பற்றிய பேச்சும். அதைத் தொடர்ந்து விவசாயிகள் பிரச்சினையும் தலையெடுக்கிறது. நீலகிரி மாவட்டத்தில் உள்ளவர்கள் பெரும்பாலும் கிழங்கு மற்றும் காய்கறி பயிரிடுவதில் ஈடுபட்டுள்ளனர். நாங்கள் அரசின் முன்னேற்ற முயற்சிகளுக்கு எல்லா ஒத்துழைப்பும் தருவோம், பாதிக்கப்பட்ட விவசாயிகளுக்கு உதவி நல்க வேண்டும் என்றனர் முதல்வரும் பட்ஜட் தயாரித்துசட்ட மன்றத்தில் முன் வைக்க இருக்கும் நேரத்தில் எதையும் முன்கூட்டி அறிவிப்பது முறையல்ல என்று கூறி, இது மக்கள் அரசு, மக்கள் பிரச்சினையை மதித்துச் செயல்படும் என்று உறுதி சொல்லி ஒரு மணி நேர அளவில் கலந்துரையாடிவிடைபெறுகிறார். இதுவரை 'இல்லாத அளவு, ஒரு முறைக்கு இரு முறை அனைத்துக் கட்சியினரை அழைத்து மணிக்கணக்காக உரையாடிய முதல்வருக்கு நன்றியினைத் தெரிவிக்கிறோம். நிவாரணப்பணிக்கு ஆணையிட ஒரு முறையும் அதை அமல் படுத்துவதைப் பார்வையிட மறுமுறையும் முதல்வர் வந்திருப்பதை கட்சி உணர்வு மறந்து பாராட்டுகிறோம்'' என்று அனைத்துக் கட்சியின் சார்பில் கூறி விடைபெறுகின்றனர்.

சுற்றுப்பயணத்தின்போது தம்மிடம்தரப்பட்ட மனுக்கள், அதுபற்றிய குறிப்புகள் அனைத்தையும் வரிவிடாதுபடித்து முடிக்கிறார். தன் துணையாளரைப் பக்கத்தில் வைத்து, அந்த மனுக்களின் மீது நடவடிக்கைகளுக்கு உத்தரவு இடுகிறார். அவரிடம்தரப்பட்ட எந்த ஒரு மனுவும் அவரின் பார்வை படாமல் போவதில்லை. அவைகளை அவர்



ஏதோ எழுத்துப் படிந்த காகிதங்களாக அல்ல; அந்த ஒவ்வொரு மனுவுக்குப் பின் ஒரு உயிரின் உணர்ச்சிக் கொப்பளிப்பு இருப்பதாக மதிக்கிறார். சந்தித்த சிலரிடம் தங்கள் கோரிக்கையை எழுதிக் கொடுங்கள் என்றாரே, அதைக்கவனத்தில் வைத்து அவர்கள் கீழே இருப்பார்கள் அவர்களிடமிருந்து மனுக்களை பெற்றுக் கொள்ளுங்கள் என்று சொல்கிறார் நீலகிரி மாவட்ட கழகத்

டாக்டர்
இரா. சனார்த்தனம்
எம். ஏ, பி. எச் டி

தோழர்கள் பக்கத்து அறையில் கூடி இருக்கிறார்கள். தலைவர் புறப்பட்டவர் கழகத்தோழர்களிடம் பொது இடங்களில் எப்படி நடந்து கொள்ள வேண்டும்என்றும்விருந்தினர் மாளிகையில் தலைவர்களைக் காண வரும்போது ஆர்வ மேலீட்டால்தங்கியிருக்கும் மற்றவர்களுக்கு நாம் இடையூறு விளைவித்து விடக்கூடாது என்றும், கட்டுப்பாடு கழகத்தோழர்களுக்கு அவசியம் எனவும் வலியுறுத்தி அறிவுரை கூறுகிறார்.

(நாளை முடிவுறும்)

## கழகச் செய்திகள்

### சிதம்பரம்

சிதம்பரம் கழகக் கிளை மன்றத்தின் சார்பில் வீர வணக்க நாள் பொதுக்கூட்டம் நடந்தது. இராமஆதிமூலம் தலைமையில் ரத்தின வேணுகோபால், வீரகண்ணன், ஈ வெங்கடாசலம், ரங்கநாதன், ரங்கசாமி, வெள்ளையன், எம் இயேசுராசு, கே கலியபெருமாள், பாலகுரு, செங்குட்டுவன், வளவன் ஆகியோர் பேசினர்.

### சீர்காழி

சீர்காழிசோழன்போக்குவரத்துக்கழக பணிமனையின் முன்பு விசுவாசம் தலைமையில் நடந்த கழகக் கொடியேற்று விழாவில் டி.வி சம்பத், க. பால சுப்ரமணியன், மா, ராமலிங்கம், தமிழன்பன், நடசுந்தரம் வீ சுந்தரேசன், கே விசுவநாதன் சதாசிவம் கோவிந்தராசுகலியமூர்த்தி ஆகியோர்பேசினர்.

உத்தரபிரதேசத்தில் அரசியல் நெருக்கடி:

# 102எம்.எல்.ஏக்கள் போர்க்கொடி



லட்சுமணபுரி, ஜன. 30- உத்தரப்பிரதேச மாநில சட்டசபை ஜனதாக் கட்சியில் பழைய ஜனசங்கத்தைச் சேர்ந்த 10 உறுப்பினர்களும் முதலமைச்சர் ராம்நரேஷ் யாதவுக்கு தங்களது ஆதரவை வாபஸ் பெற் விட்டார்கள். முதலமைச்சரை அகற்ற வேண்டும் என்று இவர்கள் அனைவரும் போர்க்கொடிஉயர்த்தி இருக்கிறார்கள்.

அதிருப்தியாளர்கள் கூட்டத்தில் 14 மந்திரிகளும் கலந்து கொண்டனர். இவர்கள் அனைவரும் பழைய ஜனசங்கத்தினர்.

உத்தரப் பிரதேசத்தில் அரசியல் நெருக்கடிமேலும் முற்றியிருக்கிறது. முதலமைச்சர் ராம் நரேஷ் யாதவை பதவியிலிருந்து நீக்கவேண்டும என்று 8 மந்திரிகளும், 6 துணை மந்திரிகளும் போர்க்கொடி உயர்த்தியுள்ளனர்.

முதல் மந்திரி எதிர்ப்பு கோஷ்டியினா நடத்திய கூட்டத்துக்கு உத்தரபிரதேச ஜனதா கட்சி பொதுச் செயலாளர் கவுசல் கிஷோா தலைமை தாங்கினா. முன்னாள் ஜனசங்கத்தைச் சேர்ந்த சட்டப்பேரவை மேலவை உறுப்பினர்கள் 102 பேரில் 100 பேர் கலந்துகொண்டனர். 14 மந்திரிகளும் பங்கேற்றனர்.

பழைய ஜனசங்கமத்திய தலைமையினா தலையிட்டால்கூட முதல் மந்திரி ராம்நரேஷ் யாதவை அகற்றுவதற்கான இயக்கம் கைவிடப்படாதுஎன்று அனைவரும் உறுதிமொழி எடுத்துக் கொண்டனா, தடுத்து நிறுத்துவதற்கு முயற்சி நடந்தாலும்கூட உறுப்பினர்கள்தொடர்ந்து செயல்படுவார்கள் அந்த அளவுக்கு விஷயம் முற்றிவிட்டது என்றும் கூட்டத்தில் பேசியவர்கள் தெளிவாகவும் உறுதியாகவும் கூறினார்கள்

ராம்நரேஷ் யாதவ் பெரும்பான்மை ஆதரவை இழந்து விட்டார் என்றும் பலப்பரீட்சையில் ஆவர் தோல்வியடைந்துவிடுவார் என்றும் அவர்கள் கருதுகிறார்கள்.

### பலப்பரீட்சை வெற்றிபெறுமா?

ஆனால் பலப்பரீட்சை வெற்றி பெறுமா என்றால் வெற்றி பெறாது என்று ராம்நரேஷ் யாதவ ஆதரவு கோஷ்டியினர் கருதுகிறார்கள். உத்தரப் பிரதேச சட்டசபையில் ஜனதா கட்சியைச் சேர்ந்த 389 உறுப்பினர்கள் இருக்கிறார்கள். இதில் சட்டப் பேரவை உறுப்பினர்கள் 346 பேரும் மேலவை உறுப்பினர்கள் 43 பேரும் உள்ளனர். இவர்களில் பெரும்பான்மையினரின் ஆதரவு ராம்நரேஷ் யாதவுக்கு இருக்கும் என்று அவர்கள் கருதுகிறார்கள்.

பழைய பாரதிய லோக்தளம், பழைய சோஷலிஸ்ட் கட்சி ஆகியவற்றைச் சேர்ந்த உறுப்பினர்கள் பழைய காங்கிரசில் ஒரு பிரிவினர் ஆகியோரின் ஆதரவும் யாதவுக்கு உண்டு என்றும் கூறப்படுகிறது.

### கோரிக்கை மனு

உத்தரபிரதேச ஜனதா சட்டசபை உறுப்பினர்கூட்டத்தைக் கூட்டவேண்டும். அந்தக் கூட்டத்தில் நம்பிக்கை வாக்குபெற வேண்டும் என்று முதல் மந்திரி யாதவை வற்புறுத்தும் கோரிக்கை மனுவில் சுமார் 100 பேர் கையெழுத்திட்டிருக்கிறார்கள், ஜனதாக் கட்சி தலைவர் சந்திரசேகர் நாளை (புதன்) டெல்லி திரும்புகிறார். அப்போது கோரிக்கை மனு அவரிடம் தரப்படும் அந்த நகல் யாதவுக்கு அனுப்பப்படும் என்றும் முதல் மந்திரி எதிர்ப்பு கோஷ்டி கூட்டத்தில் முடிவு செய்யப்பட்டது.

### பீகாரிலும் நெருக்கடி

பீகாரிலும் முதல் மந்திரி கர்ப்பூரிதாகூரை நீக்க வேண்டும் என்றுகோரிக்கை விடுக்கப்பட்டுள்ளது கர்ப்பூரி எதிர்ப்புகோஷ்டியினர் தனியாக கூட்டம் நடத்தினார்கள்.

கூட்ட முடிவுகள் பற்றி நிருபர்களிடம் விளக்கிப் பேசும்போது தேஜ்நாராயணன்யாதவ், ஷம்புநாத்ஜா திரிபுவன்சிங் ஆகியோர் கூறியதாவது:-

ஜனதா சட்டமன்ற உறுப்பினர்களின் விசேஷ கூட்டத்தை முதல் மந்திரி கூட்டத் தவறினால் நாங்கள் (எதிர்ப்பு கோஷ்டியினர்) தனியே மீண்டும் கூட்டம் நடத்திகட்சி சட்ட அமைப்பு ரீதியில் முதல் மந்திரி பதவியில் இருந்து கர்ப்பூரியை நீக்கி புதிய தலைவரை (முதல் மந்திரியை) தேர்ந்தெடுப்போம்''

பீகார் மாநில ஜனதா சட்டமன்ற உறுப்பினர் விசேஷ கூட்டத்தை கட்சி மேலிட அனுமதி பெற்ற பின் கூட்டி கட்சிமேலிடப் பார்வையாளர் முன்னிலையில் புதிய முதல்மந்திரியை ஓட்டெடுப்பு மூலம் தேர்ந்தெடுப்போம்''

இவ்வாறு கர்ப்பூரி தாகூரின் எதிர்ப்புக் கோஷ்டியின கூறினார்கள்.

## சிண்டா ஊறுகாய்: எட்மண்ட் வெளியிட்டார்

மதுரை, ஜன. 30- மதுரையில் இருந்து புதிதாக வெளிவரும் சிண்டா ஊறுகாய் வெளியீட்டு விழா அரிமா ஓட்டலில் நடைபெற்றது.

மதுரை மேயர் எஸ். முத்து தலைமைதாங்கினார். உணவு அமைச்சர் ஜி. ஆர். எட்மண்ட் ஊறுகாயை வெளியிட்டு, வாழ்த்திப் பேசினார். அவர் பேசுகையில், நம்முடைய ஊறுகாய்களுக்கு வெளிநாடுகளில் குறிப்பாக அமெரிக்காவில் ஏராளமான கிராக்கி இருக்கிறது என்று கூறினார்.

மற்றும் துணைமேயர் கே. எஸ். சந்தானம், தேனு வங்கி நிர்வாகி விசுவநாதன், குளித்தலை ராஜு ஆகியோரும்வாழ்த்திப் பேசினார்கள்.

சிண்டா ஊறுகாய் உரிமையாளர் சண்முகநாதன் நன்றி கூறினார்.

விழாவில் கழகத்தோழர்கள் கே எஸ் ராசேந்திரன், இ. கிருபானந்தம், சங்கர நாராயணன், மதுரை சுந்தரம் உள்பட திரளானோர் கலந்து கொண்டனர்.

## நாஞ்சிலார் டெல்லி சென்றார்

சென்னை, ஜன. 30-திட்டக்குழுவினருடன் பேச்சுவார்த்தை நடத்துவதற்காக நிதியமைச்சர் நாவுக்கரசர் நாஞ்சிலார் இன்று (செவ்வாய்) புதுடெல்லி சென்றார்.



நாடாளுமன்றத்தில்

## இந்தித் திணிப்புக்கு எதிராக குரல் தராத தி. மு. க. எம். பி.

மோகனரங்கம் கண்டனம்

சென்னை, ஜன. 29— இந்தித் திணிப்புக்கு எதிராக நாடாளுமன்றத்தில் குரல் கொடுப்பது புரட்சித்தலைவரின படையினர் தான் என்றும நாடாளுமன்றத்தில் எதிர்ப்பு தெரிவிக்காமல் பேசாமல் இருப்பது தி. மு. க. எம். பி. தான் என்றும் கழக நாடாளுமன்ற உறுப்பினர் மோகனரங்கம் கூறினார்

சென்னை, இந்திராநகரில் உள்ள வத்தலக் குண்டு ஆறுமுகம் நினைவு மன்றத்தின் சார்பில் தமிழர் திருநாளை யொட்டி பள்ளி மாணவர்களுக்கான விளையாட்டுப் போட்டிகள் நடந்தன. போட்டியில் வெற்றி பெற்ற மாணவர்களுக்கு பரிசுகள் வழங்கும் விழா இந்திராநகரில் நடந்தது.

கோ, பா. அமிர்தம் வரவேற்றார். அ. ந. ராசல் தலைமை வகித்தார் அமைச்சர் ஆர்.எம்.வீ. பள்ளி மாணவர்களுக்கு பரிசுகள் வழங்கிப் பேசினார்.

நாடாளுமன்ற கழக உறுப்பினர் இரா மோகனரங்கம் பேசியதாவது:

நாடாளுமன்றத்தில் தமிழகத்தைச் சேர்ந்த 39 நாடாளுமன்ற உறுப்பினர்கள் இருக்கின்றனர். இதில் கழகத்தைச் சேர்ந்தவர்கள் 19 பேர் இந்தி மொழி திணிப்பு சம்பந்தமாக கேள்விகள் கேட்பது அனைத்திந்திய அண்ணா தி.மு.கழக உறுப்பினர்களே.

கடந்த 1978ம் ஆண்டு டிசம்பர் மாதம் 20ந் தேதி நாடாளுமன்றத்தில் நான் கேள்வி கேட்டேன்.

ஐ ஏ எஸ் தேர்வு எழுதுவதற்கு கேட்கப்படும்கேள்வித்தாள் இந்தி ஆங்கிலம்



ஆகிய மொழிகளில்மட்டும் இருக்கும் என்றனர் தமிழிலும் கேள்விகள் கேட்க வேண்டும்என்றுகேட்டேன்

பிரதமர் தேசாய்இதற்கு பதிலளிக்கையில் மொழி பெயர்ப்பில் பிரச்சினை ஏற்படுகிறது என்றார்.

நான் விடவில்லை. மற்ற மொழிகளைக் காட்டிலும் மிகவும் பழமையான மொழி தமிழ்மொழி. கல் தோன்றி - மண் தோன்றா காலத்தில் தோன்றியது தமிழ்மொழி. அதில்கேள்விகள் கேட்க வேண்டும் என்று கேட்டேன். இப்படி ஆணித்தரமாக கேள்விகள் கேட்பது யார்? அனைத்திந்திய அண்ணா தி மு கழக உறுப்பினர்கள்தான்.

### இந்தி திணிப்பு குறித்து பேசாத ஆசைத்தம்பி

ஆனால் தி மு கவைச் சேர்ந்த ஒரு உறுப்பினர் இருக்கிறார். அவர்சபையில் என்றாவது இந்தி திணிப்பு குறித்து பேசினாரா என்றால் இல்லை. ஒருநாள் கூட வாய் திறந்து சபையில் பேசியது

(4ம பக்கம் பார்க்க)

## துணைஷெரீப்பாகசித்ரமகால் கிருஷ்ணமூர்த்தி நியமனம்

சென்னை, ஜன. 30- சென்னை நகர துணை 'ஷெரீப்' ஆகபட அதிபர் 'சித்ரமகால்' கிருஷ்ணமூர்த்தி நியமிக்கப்பட்டுள்ளார்.

தற்போது 'ஷெரீப்' ஆக தொழில் அதிபர் அனந்தகிருஷ்ணன் இருந்து வருகிறார்.

தலைமை நீதிபதியின்ஒப்புதலுடன் 'சித்ர மகால்' கிருஷ்ணமூர்த்தியை துணை 'ஷெரீப்' ஆக நியமித்து இருப்பதாக அனந்தகிருஷ்ணன் அறிவித்துள்ளார்.

'சித்ரமகால்' கிருஷ்ணமூர்த்தி பட அதிபர். அத்துடன் தென் இந்திய பட அதிபர்கள் சங்கத் தலைவராகவும் இருந்து வருகிறார்.

துணை ஷெரீப் பொறுப்பினை ஒரு வருட காலத்திற்கு சித்ரமகால் கிருஷ்ணமூர்த்தி வகிப்பார்.

# அண்ணா



## சந்தா விவரம்

1 வருடச் சந்தா தொகை ரூ. 120
6 மாதச் சந்தா தொகை ரூ. 60
3 மாதச் சந்தா தொகை ரூ. 30

3 மாதத்திற்கு குறைவான சந்தா தொகை ஏற்று கொள்ளப்பட மாட்டாது

நிர்வாகி
"அண்ணா"
அவ்வைசண்முகம் சாலை, சென்னை-600 014.






மலேசிய பிரதமர் டாடா உசேன் சென்னை வந்தபோது விமான நிலையத்தில் முதல்வர் புரட்சித் தலைவர் வரவேற்றார்.

## புரட்சித்தலைவர் சூளுரை...

(முதல் பக்கத் தொடர்ச்சி)

கிறது. பீரோக்களில் எக்ஸ்ரே படங்கள் வைத்திருக்கிறார்கள்,

மருத்துவக் கல்லூரி மாணவர்களுக்கு சந்தேகம் எழுந்தால் சம்பந்தப்பட்ட எக்ஸ்ரே படத்தை எடுத்து போட்டுப் பார்த்து குறிப்பை எழுதிக் கொள்கிறார்கள். அப்படிப்பட்ட வசதிகள் அங்கே இருக்கின்றன.

### வசதிக் குறைவு

மேல்நாட்டினர் அளவுக்கு நமக்கு வசதிகள் இல்லை. வசதிக் குறைவுதான் இருக்கிறது. அந்த வசதிகளை எப்போது பெறுவோம் என்பதுதான் நமது சிந்தனை.

பல துறைகளையும் மருத்துவத் துறையோடு இணைத்துச் செயல்படுத்துகிறார்கள்.

இதையெல்லாம் பார்க்கும் போது நாம் எங்கோ இருக்கிறோம். அவர்கள் எங்கோ சென்று விட்டனர் என்பதையும் பார்க்கிறோம்.

என்னை இங்கே முதலமைச்சர் என்று குறிப்பிட்டார்கள். முதலமைச்சர் பதவி வரும், போகும். பல முதல்வர்கள் வந்து போனதைப் பார்த்துஇருப்பீர்கள்.

ஆனல் மருத்துவப்படிப்பு படித்து பட்டம் பெறுவது அப்படி அல்ல. ஆண்டுகள் ஆக ஆக அனுபவமும் தகுதியும் உயருகிறது.

மாணவர்கள் அரசியலுக்கு அப்பாற்பட்டு இருக்க வேண்டும். மாணவர்கள் அரசியல்வாதிகளைக் கட்டுப்படுத்த வேண்டும். அரசியல் வாதிகள் மாணவர்களைக் கட்டுப்படுத்தும் நிலை கூடாது.

(கை தட்டல்)

ஆனல் இங்கே யார் யாரை பயன்படுத்துகிறார்கள்?

அமெரிக்காவில் மாணவர்கள் படிக்கும்போது வேலை செய்து சம்பாதித்து பெரிய கட்டிடத்தையே கட்டி இருக்கிறார்கள்.

ஆசிரியர்கள் தாமதமாக வந்தால் கூட கேட்கிறார்கள். இதனால்மாணவர்கள் தாமதமாகவந்தால்கேட்க வேண்டியதில்லை என்று கருதிவிடக்கூடாது.

மாணவர்கள் கல்வியில் அக்கறையோடு இருப்பதை இது காட்டுகிறது. சிறிதும் விட்டுக்கொடுப்பதில்லை.

மாணவர்கள் அரசியலைத் தெரிந்து கொள்ள வேண்டும். நாட்டு நிலையைப் புரிந்து கொள்ளவேண்டும்.

### புதிய புதிய கண்டுபிடிப்பு

மாணவர்கள் ஆராய்ச்சி செய்து புதிய விஞ்ஞானக் கருவிகளை கண்டுபிடிக்க வேண்டும். அப்படிக்கண்டு பிடிப்பவை ஏழைஎளிய மக்கள் எளிதாக வாங்கக் கூடியதாக இருக்க வேண்டும்.

அவை எல்லாம் ஏழைகளுக்குச் சொந்தமாக்கப் படவேண்டும்.

பணம் இருந்தால் தான் உயிரைக்காக்க முடியும் என்ற நிலை அடியோடு மாற்றப்படும் நிலை உருவாகி வருகிறது.

(கைதட்டல்)

வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட நீலகிரி ராமநாதபுரம் மாவட்டங்களில் மாணவ மாணவிகள் செய்த பணிகளைப் பார்த்தேன். குப்பைச் சகதிகளைச் சுமந்து சென்றனர்.

இப்படிப்பட்டவர்கள் அதிகாரிகளாக-மருத்துவர்களாக வரும்போது நாட்டுக்கு எவ்வளவு நன்மை கிடைக்கும் என்று எண்ணிப் பார்க்கிறேன்.

### எல்லா படிப்பும் தமிழில்

ஆங்கிலத்தில் மட்டும் அல்லாமல் தமிழிலும் சொல்லித்தர இயலும் நிலை உருவாகி இருப்பதை- இதனல் நாடு எப்படி இருக்கும் என்பதை எண்ணி எண்ணி மகிழ்கிறேன்.

ஜப்பானில் எல்லாமே ஜப்பானிய மொழியில் தான் இருக்கின்றன. செய்ய முடியாத புதிய புதிய கருவிகளை அவர்கள் செய்கிறார்கள்.

அதுபோல தமிழிலேயே கற்று ஏன நம் அறிவியல் துறையை வளர்க்கமுடியாதா?

நம்மால் முடியும்.

இதைமறறவர்கட்கும் உணர்த்துங்கள்

தமிழ் மொழியை எந்த வகையிலும் இரண்டாந்தர மொழியாக ஆக்க தமிழகம ஒப்பாது.

தமிழக அரசு எந்த தியாகத்தையும செய்து தமிழைக் காப்பாறறும்.

(பலத்த கைதட்டல்)

இந்த நேரம் ஒருஇடைக் கால நேரம்.

நாம் முன்னேற்றம் அடையப்பார்க்கிறோம். அந்த முன்னேற்றத்தை தடுக்க இடையே சிலர் இருக்கலாம். ஆனல் முன்னேற்றப்பாதையில் துணிந்து செயல்படுவோம்.

(கை தட்டல்)

வசதி அற்ற மாணவர்கட்கு அண்ணாவின் பெயரில் உதவும் திட்டம் ஒன்றினை அரசு இங்கே செயல் படுத்த வேண்டும என்று உங்கள் மன்ற செயலாளர் ஒரு குறிப்பைத் தந்து இருக்கிறார்.

திறமையானபுதியகண்டு பிடிப்புகளுக்கு இந்த திட்டத்தை அமல்படுத்த வேண்டும் என்று கேட்டு இருக்கிறார்.

குறிப்பாக பிற்பட்டவர்கள், திறமை இருந்தும் வாய்ப்புப் பெற முடியாதவர்களுக்கு பரிசு கிடைக்க திட்டம் தந்தால் தமிழக அரசு நிச்சயம் செயல்படுத்தும். (கைதட்டல்)

தமிழுக்கு தொண்டாற்றும் மருத்துவர்கட்கு நிதி உதவி தரும் திட்டம் பற்றியும் குறிப்பிட்டு இருக்கிறீர்கள். இதனையும் தமிழக அரசு செயல்படுத்தும்.

(மீண்டும் கைதட்டல்)

### நிபுணர் பரிமாற்றம்

வெளி நாடுகளில் கல்வி பயிலச் செல்பவர்கள் திரும்பி வராமல் அங்கேயே தங்கிவிடுகிறார்கள்.

ஒரு மருத்துவரை உருவாக்க எவ்வளவு பணம் செலவாகிறது என்று பார்க்க வேண்டும். அப்படி உருவாகிறவர்களின் ஆற்றல் அறிவு தமிழகத்திற்குப் பயன்பட்டாக வேண்டும்.

வெளிநாடுகளில் தங்க விரும்புகிறவர்கள் ரூ. 5 ஆயிரம் தர வேண்டும் என்று இருந்தது. அதனை நாங்கள் ரூ. 25 ஆயிரம் என்று ஆக்கினேம். அதையும் கொடுத்து தங்க விரும்புகிறவர்கள் இருக்கிறார்கள்.

இங்கு மருத்துவர்களாக உருவாகிறவர்கள் இந்த மக்களுக்குப் பயன்படாமல் வேறு மக்களுக்கு பயன்படுவதுவேதனைக்குரியதாகும்.

வெளிநாடுகளில் உள்ள தமிழ் மருத்துவர்கள் ஒரு அமைப்பை ஏற்படுத்திக் கொண்டு 3 மாதகாலம் இங்கே வந்து கற்றுத்தர தயாராக இருக்கிறார்கள். அதற்கு தங்கும் வசதி மட்டும் கேட்டு இருக்கிறார்கள்.

அதுபோல இங்கு இருப்பவர்கள்வெளிநாடுசென்று சொல்லித்தரவும் செய்யலாம்.

இந்த திட்டம் வந்தால் வெளிநாட்டினர்பலர் இங்கு வந்து அவர்களுக்குத் தெரிந்ததை சொல்லித்தர முடியும்.

அதுபோல நம்நாட்டு நிபுணர்கள் தங்களுக்குத் தெரிந்தவைகளை வெளி நாட்டினருக்குச் சொல்லித் தர முடியும்.

இந்த திட்டத்தை தமிழக அரசு செயல்படுத்த இருக்கிறது.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் பேசினர்.

சென்னை மருத்துவக் கல்லூரியின்பெயர்பலகையைத் தமிழில் வைக்க உடனே நடவடிக்கை எடுக்கப்படும் என்றும், திருக்குறள்எல்லா இடங்களிலும்எழுதப்படும் என்றும், கல்லூரிமுதல்வர் சிவராஜன் கூறினர்.

விழாவின் இறுதியில் செல்வி மாயரசி நன்றி கூறினர்.

## மோகனரங்கம் கண்டனம்...

(3ம் பக்கத் தொடர்ச்சி)

இல்லை:

ஒருநாள் ஆசைத் தம்பியை சந்தித்தபோது அவரிடம் நேரடையாகவே இதைக் கேட்டுவிட்டேன். "என்ன அண்ணே, இந்திமொழி திணிப்பு குறித்து ஒன்றும் பேசாமல் இருக்கிறீர்களே" என்றேன்

அதற்கு அவர் "நான் என்ன செய்வது? நான் தமிழில் பேசினல் அவர்களுக்கு புரிவதில்லை அவர்கள் இந்தியில் பேசினல் எனக்கு புரிவதில்லை. ஆங்கில மொழியோ எனக்குத்தெரியாது" என்றார்

இவர்கள்தான் (திமுகவினர்) இன்றையதினம்கறுப்புக்கொடி ஊர்வலம் நடத்தி வாய்கிழிய பேசுகிறார்கள்.

உண்மையில் இந்தி திணிப்புக்குஎதிர்ப்புக்குரல் கொடுப்பதுயார்? புரட்சித் தலைவரின் படைச்சிப்பாய்களாக விளங்கும் நாங்கள் தான்.

இந்தி திணிப்பு குறித்து ஜனதா திமுகவைச் சேர்ந்த உறுப்பினர்கள் பேசுவது இல்லை.

இந்தி திணிப்பு எதிர்ப்புக்குச் சொந்தக்காரர்கள் நாங்கள்தான்,

இவ்வாறு நாடாளுமன்ற கழக உறுப்பினர் மோகனரங்கம் பேசினர்.

### ஐசரிவேலன்

அமைச்சரின் பேரவைச் செயலர் ஐசரிவேலன் பேசியதாவது:

கருணநிதி கழக ஆட்சியைப் பார்த்து சாதனை எங்கே சாதனை எங்கே என்று கேட்கிறார். கழகம் ஆட்சிப் பொறுப்பை ஏற்ற கடந்த ஒன்றரைவருடத்தில் அரிசி விலை ஏறியதா? பருப்புவிலை ஏறியதா?

உங்களது (கருணநிதி ஆட்சியில்தான் மக்கள் விலைவாசி என்ற பதத்தின் பொருளை உணர்ந்தனர், விலை, வாசி என்று, விலையை வாசித்து விட்டு வாங்காத நிலையில் தான் அன்றைய தினம் மக்கள் இருந்தனர். இன்று அந்த நிலை இருக்கிறதா?

ஆறுமாத காலம் வாளாயிருப்பேன் என்றார். இந்த ஆறுமாத காலத்தில் எத்தனை போராட்டங்களை உருவாக்கினர். எத்தனை தப்புக் கணக்குகளை போட்டார்!

அவர் போட்ட கணக்குகள் எல்லாம் தப்புக் கணக்குகளாகி விட்டன. மக்களை திசை திருப்ப கருணநிதி முயற்சி செய்து வருகிறார். அவரது முயற்சி பலிக்காது.

இவ்வாறு ஐசரிவேலன் பேசினர்.

## நாஞ்சிலார் தலைமையில் திருமணம்

சென்னை, ஜன. 30- வடசென்னை கழக மாணவரணி பிரிவின் தலைவர் என்.ராமச்சந்திரனின் சகோதரரும், கே. நாராயணசாமியின் மகனுன என்.சுப்பிரமணிக்கும் திருவொற்றியூர் என். முனுசாமியின் மகள் எம். பாக்கியவதிக்கும் பிப்ரவரி 1-ந்தேதி (வியாழன்) காலை 10மணிக்கு சென்னை புனித சேவியர் தெரு, முருகன் திரையரங்கு அருகேயுள்ள சமுதாய நிலையத்தில் திருமணம் நடக்கிறது.

நிதியமைச்சர் நாஞ்சிலார் தலைமையிலும், அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் முன்னிலையிலும் திருமணம் நடக்கிறது.






தங்கமணி பப்ளிகேஷனுக்காக 275 அவ்வை சண்முகம்சாலை சென்னை-600014 என்ற முகவரியிலிருந்து கே. ரவீந்திரனல் வெளியிடப்படுகிறது. அச்சிடுபவர் பி. தங்கராஜன் நவசக்தி அச்சகம், கச்சேரி சாலை சென்னை600004. ஆசிரியர்: எம்.ஜி.சக்ரபாணி